உ
செந்திலாண்டவன் துணை
திருச்சிற்றம்பலம்

# சிதம்பர விலாசம்

[ குறிப்புரையுடன் கூடியது ]

*

நந்தன ஆண்டு மார்கழித் திருவாதிரை
31—12—1952



ஸ்ரீ காசி மடம் : : திருப்பனந்தாள்

## திருப்பனந்தாள்
# ஸ்ரீ காசிமடத்து வெளியீடுகள்

—oo—

| | | ரூ. | அ. |
|---|---|---|---|
| 1 | விநாயகர் திருமுறை ... | 0 | 1 |
| 2 | ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் பிரபந்தத் திரட்டு - டாக்டர் உ.வே. சாமிநாத ஐயர் குறிப்புரையுடன் ... | 6 | 0 |
| 3 | சிவக்கொழுந்து தேசிகர் பிரபந்தம் ... | 3 | 0 |
| 4 | திருஞான சம்பந்தர் தேவாரம் ... | 2 | 8 |
| 5 | திருநாவுக்கரசர் தேவாரம் ... | 1 | 0 |
| 6 | சுந்தரர் தேவாரம் ... | 1 | 0 |
| 7 | திருவாசகம் ... | 0 | 6 |
| 8 | திருக்கோவையார்-பேராசிரியர்உரை ... | 2 | 0 |
| 9 | ஒன்பதாம் திருமுறை – திருவிசைப்பா, திருப்பல்லாண்டு ... | 0 | 9 |
| 10 | திருமந்திரம் ... | 1 | 8 |
| 11 | பதினோராந் திருமுறை ... | 1 | 4 |
| 12 | அம்மையார் – அற்புதத் திருவந்தாதி ... | 0 | 4 |
| 13 | திருக்கைலாய ஞானவுலா ... | 0 | 8 |
| 14 | பெரிய புராணம் ... | 2 | 8 |
| 15 | அகத்தியர் தேவாரத்திரட்டு குறிப்புரை | 0 | 6 |
| 16 | திருவிளையாடற் புராணம் ,, ... | 3 | 0 |
| 17 | தாயுமான சுவாமிகள் பாடல் ,, ... | 1 | 4 |
| 18 | கந்தபுராணச் சுருக்கம் ,, ... | 1 | 12 |
| 19 | கந்தபுராணம் - முதல் மூன்று காண்டங்கள் ஆராய்ச்சிக்குறிப்புடன் ... | 2 | 12 |
| 20 | கந்தர் அலங்காரம் குறிப்புரை ... | 0 | 4 |

திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்து வெளியீடு



உ

செந்திலாண்டவன் துணை

திருச்சிற்றம்பலம்

# சிதம்பர விலாசம்

[ குறிப்புரையுடன் கூடியது ]

*

திருப்பனந்தாள் ஸ்ரீ காசி மடத்துத் தலைவர்
ஸ்ரீ-ல-ஸ்ரீ காசிவாசி அருள்நந்தித் தம்பிரான் சுவாமிகள்
அவர்களுடைய ஆணையின் வண்ணம்

*

ஸ்ரீவைகுண்டம்
திரு T. M. குமரகுருபரன் பிள்ளை, B. A., B. L.,
அவர்களால் பதிப்பிக்கப்பெற்றது.

நந்தன ஆண்டு மார்கழித் திருவாதிரை

 [ டிசம்பர் – 1952

உ

செந்திலாண்டவன் துணை

## பதிப்புரை

—o—

" உலகினும் உயிரினும் ஒன்றி நின்றருள்
குலவிய ஒளியுயிர் குறிக்க ஐந்தொழில்
இலகிய மன்றினுள் எழில்நடஞ் செய்வோன்
வலமிகு மலரடி வழுத்து வாமரோ "

— சிவபுண்ணியத் தெளிவு

'சிதம்பர விலாசம்' என்ற இச்சிறு நூல் பூலோக கயிலாயம் எனப் புகழ்ந்து போற்றப் பெறும் தில்லை மூதூராம் சிதம்பரத் தலத்தின் ஆலய அமைப்பு முதலியவற்றை அழகுபடச் சொற்சுவை பொருட்சுவை தோன்ற நிலைமண்டில ஆசிரியப்பாவினால் 145 – அடிகளில் ஆற்றொழுக்காக அமையப்பெற்றது. இதனுள் சிற்சபை, கனக சபை, பஞ்சாக்கரப்படி முதலியவற்றின் அமைப்பும், தாண்டவமூர்த்தி, சோமாஸ்கந்தமூர்த்தி, திருமூலநாதர், உமை, பரிவாரதேவர்கள் முதலியோர் எழுந்தருளிய இடமும், குணவிசேடமும், ஸ்ரீ நடராசப் பெருமானின் அருள் தத்துவமும், அருள் வடிவத்தின் உட்பொருளும் நுண்ணிதாக விளக்கப்பெற்றுள்ளன. ஆகவே இந்நூல் சிதம்பரத் தலத்துக் கோயிலைப்பற்றி அறிவதற்குரிய ஓர் அரிய துணை நூலாகும்.

இந்நூல் அண்மையில் சென்னை அரசியலார் கையெழுத்து நூல் நிலையப் பதிப்பாக வெளி வந்ததாகும். இதனை இயற்றிய ஆசிரியர் பெயர் முதலியன அறிதற்குப் போதிய ஆதாரம் ஒன்றும் கிடைக்கவில்லை. திருச்சிராப்பள்ளி பொன்னையா உயர்நிலைப்பள்ளித் தலைமைத் தமிழா சிரியர் வித்துவான் தி. பட்டுச்சாமி ஓதுவார் அவர்கள் எழுதிய குறிப்புரையுடன் 'குமரகுருபரன்' இதழில் தொடர்ந்து வெளிவந்துள்ள இந்நூல் நந்தன ஆண்டு மார்கழித் திருவாதிரை நன்னாளாகிய இன்று திருப்பனந்தாள் ஸ்ரீ காசி மடத்து இலவச வெளியீடாக வெளி வருகின்றது.

ஸ்ரீ-ல-ஸ்ரீ காசிவாசி அருள்நந்தித் தம்பிரான் சுவாமிகள் அவர்கள் இதுவரை சைவ சமயத்திற்கும், தமிழ் மொழி வளர்ச்சிக்கும் ஏனைய பொது நலங்களுக்கும் வழங்கிய அருட்கொடைகள் சுமார் 16 லட்சம் ரூபாய்களுக்கு மேலாகும். இன்னும் பிற அறங்களுக்காக அளவற்ற பொருளை அருளியுள்ளார்கள். இவர்கள், ஸ்ரீ நடராசப்பெருமான் திருவருட்டிறத்தினைச் சைவ நன்மக்கள் எளிதிற்பெற்று நற்பேறு அடைந்து உய்யவேண்டும் என்ற அருள் நோக்கம் கொண்டு இச்சிறுநூலை இலவசமாக வழங்கும்பொருட்டு வெளியிட மனமுவந்தது சைவ உலகம் மிக மிகப் பாராட்டுதற்குரியதாகும். அவர்களின் அருட்கொடை வழிவழிச் சிறப்புறுவதாக.

இந்நூலுக்குச் சிறந்த முறையில் குறிப்புரை எழுதி யளித்த வித்துவான் தி. பட்டுச்சாமி ஓதுவார் அவர்களுக்கும், இந்நூலினைத் தனிப் புத்தகமாக வெளியிடுதற்கு 6—9—52ல் R. C. No. 724/52 என்ற எண்ணுப்படி உரிமை வழங்கிய சென்னை அரசினர் கையெழுத்து நூல் நிலையப் பாதுகாவலர் திரு. T. சந்திரசேகரன் M. A., L. T., அவர்களுக்கும் எமது அன்பு கலந்த நன்றி உரியதாகும்.

இச்சீரிய பணியை அடியேனுக்கு வழங்கி யருளிய ஸ்ரீ-ல-ஸ்ரீ காசிவாசி சுவாமிகள் அவர்கள் திவ்விய திருவடி மலர்களையும், அவர்கள் ஆணைவழி நின்றருளும் ஸ்ரீ காசி மடத்து ஜூனியர் ஸ்ரீமத் வித்துவான் மகாலிங்கத் தம்பிரான் சுவாமிகள் அவர்கள் சீரிய திருவடி மலர்களையும் அடியவன் மனமொழி மெய்களால் வந்தித்து வழிபடுகின்றேன்.

ஸ்ரீவைகுண்டம்,
31—12—'52

இங்ஙனம்,
T. M. குமரகுருபரன் பிள்ளை,
B. A., B. L.,

# ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் வரலாறு

ஸ்ரீ ஆதி குமரகுருபர சுவாமிகள் தென் பாண்டி நாட்டில் ஸ்ரீவைண்டத்தில் அவதரித்தார். திருச்செந்தூர் முருகப்பெருமான் அருளால் ஐந்து ஆண்டில் ஊமை நீங்கிக் 'கந்தர் கலிவெண்பா'ப் பாடி அருள் பெற்றார்; மதுரை மீனாட்சியம்மை மீது 'பிள்ளைத் தமிழ்' பாடி அம்மையால் முத்தாரம் அணியப்பெற்றார்; திருமலை நாயக்க மன்னன் விருப்பத்திற்கு இணங்க, 'நீதிநெறி விளக்கம்' என்னும் நூலை அருளினார்; தருமை ஸ்ரீ மாசிலாமணி தேசிகரை வழிபட்டுப் 'பண்டார மும்மணிக் கோவை' பகர்ந்தார்; ஆரூர், வேளூர், தில்லை தரிசித்து மாலை, கோவை முதலியன பாடினார். காசி சென்று 'சகலகலாவல்லி மாலை' 'காசிக் கலம்பகம்' முதலியன அருளினார்; சிங்கத்தின் மீதேறிச் சென்று முகலாய மன்னனைக் கண்டு அவன் உதவியால் கேதார மந்திரம், கேதாரத்துறை, அறச்சாலை முதலியன அமைத்தார்; சைவ சித்தாந்தத்தை வளர்த்தார்; வெள்ளியம்பலவாணத் தம்பிரான் முதலியோருக்கு வித்தியா குருவாகத் திகழ்ந்தார்.

இச் செயற்கரிய செயல்கள் புரிந்த முனிவர் பெருமானின் நினைவு எப்பொழுதும் உலகுக்கு நன்னெறி காட்டி இன்பந்தருவதாகும்.

இவர்கள் காலம் கி. பி. 17-ம் நூற்றாண்டின் பிற்பகுதி ஆகும்.

உ
செந்திலாண்டவன் துணை
திருச்சிற்றம்பலம்

# சிதம்பர விலாசம்

## [குறிப்புரையுடன்]

—oo—

### காப்பு

கலி விருத்தம்

நிதந்தொறும் புலிமுனி பதஞ்சலி போற்றிய
சிதம்பர விலாச விதந்தனை மொழிந்திடக்
கரமலர் நான்கொடுத்(து) அறமுக மாகிய
நரமுக கணபதி திருவடி பணிகுவாம்.

---

குறிப்புரை :—காப்பு : புலிமுனி - புலிக்கால் முனிவர் ; வியாக்கிரபாதர். பதஞ்சலி - பதஞ்சலி முனிவர் ; இவர் மகா பாஷ்யம் இயற்றிய பதஞ்சலியினும், யோக சூத்திரம் இயற்றிய பதஞ்சலியினும் வேறுவர். இவரைத் திருமூலர், 'மன்று தொழு பதஞ்சலி' என்பர். சிதம்பர விலாசம் - சிதம்பரத் தலத்தில் எழுந்தருளிய நடராசப் பெருமான் கோயிலின் அமைப்பு முதலியவற்றின் மேன்மைகளை விவரித்துக் கூறும் நூல். விலாசம் - மேன்மை, அழகு. நரமுக கணபதி - மனித முகத்தோடு கால்களை மடக்கிக்கொண்டு வீற்றிருக்கும் பிள்ளையார். இப்பிள்ளையார் கோவில் தேரோடும் தெற்கு வீதியின் நடுவில், தென்பாரிசத்தில் வடக்கு நோக்கிய சந்நிதியாக உள்ளது.

## நூல்

### நிலைமண்டில ஆசிரியப்பா

திருத்தகு மாளிகை பொருப்பெனத் திகழ்தரு
தொல்லை யாகிய தில்லை மூதூர்
ஆகவும் மாசிவ லோகம் பூமிசை
அருட்டிரு நகராய் உதித்து விராட்டுவின்
இதயக் கமலத்(து) உதய மாயின ;
மாநகர் அதனில் ஞானமங்(கு) உரித்துச்
சச்சி தானந்த சிற்சபை ஆகிய

---

நூல் 1—40 வரை சிற்சபையின் தத்துவம் கூறப்பெற்றுள்ளது. 1. திருத்தகு - அருட்செல்வம் நிறைந்த. பொருப்பு என - மேருமலைபோல. 2. தில்லை - தில்லை மரங்கள் அடர்ந்த இடம் ; சிதம்பரம். மூதூர் - பழமையாகிய ஊர். தில்லையாகிய மூதூர் ஆகவும் என்க. 3. மாசிவலோகம் ஆகவும்-சிறந்த கயிலாய மாகவும். பூமிசை - பூமியின்மேல். 4. விராட்டுவின் இதயக் கமலம் - விராட் புருடனின் இருதயத் தாமரை. (உலகமே விராட் புருடனின் வடிவம்; அதற்குத் திருவாரூர், மூலாதாரம் ; திருவானைக்கா, கொப்பூழ் ; திருவண்ணமலை, மணிபூரகம்; சிதம்பரம், இருதயம்; திருக்காளத்தி, கண்டம் ; காசி, புருவமத்தியம் என நூல் கூறும்.) 6. உரித்து-உரிமை. 7. சத்து+சித்து+ஆனந்தம் = சச்சிதானந்தம். சிற்சபையாகிய பரமரகசியம் என்க. சிற்சபை - ஞானசபை ; சிற்றம்பலம். இது நட

இரவுபகல் அற்ற பரம ரகசியத்தில்
காரணம் ஆகிய ஆரணம் நான்கும்
தோரண கம்பத் தூணதாய் விளங்கின ;
சுருதி நான்கினுக்(கு) அருகுதென் புலத்து

---

ராசப்பெருமான் எழுந்தருளி இருக்கும் இடம் ஆகும். இங்கு, ஸ்படிக லிங்க மூர்த்தியும், இரத்தின சபாபதியாகிய மரகத நடராச மூர்த்தியும் எழுந்தருளியுள்ளனர். ஸ்படிக லிங்க மூர்த்தி, அழகிய சிற்றம்பல முடையார் என்றும், திருவம்பல முடையார் என்றும் வழங்கப்பெறுவர். நடராசப் பெருமானின் வலது புறத்தில் சிதம்பர இரகசியம் உள்ளது. அதில் மந்திர சொரூபமாகிய திருவம்பலச்சக்கரம் அமைக்கப் பெற்றுள்ளது. அதன்மீது தங்க வில்வ மாலை சாத்தப்பெற்றுள்ளதோடு திரை ஒன்றும் தொங்குகிறது. திரை வெளிப்புறம் கருப்பாகவும், உட்புறம் சிவப்பாகவும் உள்ளது. இது மறைப்புச் சத்தியே அருட்சத்தியாக மாறி அருள்செய்யும் என்பதைக் காட்டுவதாகும். இங்கு, நடராசப் பெருமான் சகளத்திருமேனி ஆகும்; இரகசியம் நிட்களத்திருமேனி ஆகும்; ஸ்படிக லிங்க மூர்த்தி சகளநிட்களத் திருமேனி ஆகும். நடராசப் பெருமானின் இடது புறத்தில் சிவகாமி அம்மையாரும், அம்மையாருக்கு இடது புறத்தில் சுவர்ண கால பைரவரும் காட்சி அளிக்கின்றனர். 8. பரம ரகசியம் - மேலான இரகசியம். 9. ஆரணம் நான்கு - இருக்கு, யசுர், சாமம், அதர்வணம் என்ற நான்கு வேதங்கள். 11. சுருதி - வேதம். அருகு - சமீபம். தென்

மங்கள மாகிய அங்கமோர் ஆறும்
மூன்று கோணமும் தோன்றஇரு பாலும்
அறுதா றாக நிறுவி அமைந்தன ;
மிக்கஅங் கத்தின் பக்க மாகவும்
பேதகம் இலாத பூதமோர் ஐந்தும்
தம்பம்ஐந் தாகவும் பம்ப அமைந்தன ;
மொய்ம்புற நிறுவிய ஐம்பூ தத்தின்
பாங்கர் தென்புலத்து வீங்கிய பெருமை
வழுவில்ஆ கமங்கள் எழுநிலை யாகவும்
நாலு கோணமும் சாலவும் விளங்க
இருபத் தெட்டும் உருவெடுத்(து)அமைந்தன ;
இவ்வயின் இடையே திவ்வியம் விளங்க
தொண்ணூற் ருறு துவாரம தாகவும்

---

புலம் - தென்பாகம். 12. அங்கம் ஓர் ஆறும்-சிட்சை, வியாகரணம், நிருத்தம், சோதிடம், கற்பம், சந்தோபிசிதம் என்ற வேதாங்கம் ஆறும். 16. பேதகம் - வேறுபாடு. பூதம் ஓர் ஐந்தும் - நிலம், நீர், தீ, காற்று, விசும்பு என்ற ஐந்து பூதமும். 17. தம்பம் - தூண். பம்ப - பரவ; விளங்க. 18. மொய்ம்பு வலிமை. 19 பாங்கர் - பக்கம். தென் புலத்து-தென் பாகத்தில். 20. ஆகமங்கள் - காமிகம் முதலிய சிவாகமங்கள் (இருபத்தெட்டும்). 21. சாலவும் - மிகவும். 23. இவ்வயின் - இவற்றின். திவ்வியம் - தெய்வத்தன்மை. 24. தொண்ணூற்ருறு - 96 தத்துவங்கள் ;

தன்னிகர் இல்லாத் தத்துவம் இருந்தன ;
பண்ணமை வாகிய எண்ணெண் கலைகளும்
தெய்வப் பொதுவினில் கையதாய் இருந்தன ;
இருநூற்(று) இருபத்து நாலு புவனமும்
மருவிய பலகை வடிவுகொடு பரந்தன ;
இருபத் தோரா யிரத்தறு நூறு
சுவாசம் அனைத்தும் தாம்பிர ஓடாய்
உருவெடுத்(து) உம்பர் மருவி அமைந்தன ;
எழுபத் திரா யிரம்நரம்(பு) என்ன
அளவி லாதபேர் ஆணி அமைந்தன ;

---

இவை உன்னிலைக் கருவிகளாகிய ஆத்ம தத்துவம் 24, வித்தியா தத்துவம் 7, சிவ தத்துவம் 5 ஆக முப்பத்தாறும், புறநிலைக் கருவிகளாகிய பூதகாரியம் 25, நாடி 10, வசனுதி 10, வாக்கு 4, குணம் 3, அகங்காரம் 3, அவத்தை 5 ஆக அறுபதும் ஆகும். 26. பண்-அழகு. எண்ணெண் கலைகள்-64 கலை ஞானம். 27. பொதுவினில் - பொற்சபையினில். கையதாய் - ஒழுங்காய். 28. இருநாற்று இருபத்து நாலு புவனம் - இவை நிவிர்த்தி கலை, பிரதிட்டா கலை, வித்தியா கலை, சாந்திகலை, சாந்தியாதீத கலை என்ற பஞ்ச கலைகளிலும் விளங்கும் புவனங்களாம். 30. இருபத்தோராயிரத்து அறுநூறு சுவாசம் - இது சாதாரணமாய் ஒரு மனிதன் ஒரு நாளைக்கு விடும் சுவாசம் என்று சிவயோகசாரம் என்னும் நூல் கூறும். 33 எழுபத்து ஈராயிரம் நரம்பு - இவை மனிதன் உடலில் உள்ள நரம்புகளாம்.

ஆணி யொன்றுக்கு அளவில்பஞ் சாக்கரம்
ஊணி ஊணிஅவ் வோட்டிடை கரந்தன ;
உற்ற [1]ஐம்பத் தோரட் சரமும்
பொற்றக(டு) ஆகப் பொதுநடு விளங்கின ;
தாவில் பெருமைச் சத்திஒன் பதின்மரும்
தூவி களாகத் துலங்க இருந்தனர் ;
வருக்கம்ஐந் தாகிய திருக்களிற் றுப்படி
அடிதனில் நகரமும் அதன்மேல் மகரமும்
நடுவினில் சிகரமும் நான்கினில் வகரமும்
யகர முடிவாம் ஐந்தக் கரமும்

---

35. பஞ்சாக்கரம் - இங்குச் சூக்கும பஞ்சாட்சரமாகிய சிவாயநம என்ற ஐந்தெழுத்து. 37. ஐம்பத்தோரட்சரம் - வடமொழி உயிரும் மெய்யும் ஆகிய 51 – எழுத்துக்கள். 39 சத்தி ஒன்பதின்மர் - நவசத்திகள்; இவர்கள் வாமை, சேட்டை, இரௌத்திரி, காளி, கலவிகரணி, பலவிகரணி, பலப்பிரமதனி, சர்வபூததமனி, மனோன்மனி என்போர். 40. தூவி - ஸ்தூபி ; சிகரம்.

41 - 45 வரை பஞ்சாக்கரப்படி அமைப்புக் கூறப்பெற்றுள்ளது. 41. வருக்கம் – (அடுக்கிய) வரிசை. திருக்களிற்றுப்படி - இஃது இரண்டு பக்கங்களிலும் யானை முகமுடைய படிகள் ; இவை கனகசபையிலிருந்து சிற்சபைக்கு ஏறிப்போகும் ஐந்து படிகளாம். 42. அடிதனில் - கீழ்ப்படி ; முதற்படி. 44. முடிவாம் என்

பாடபேதம் :- 1. அன்பத் தோரட்.

பஞ்சாக் கரத்திருப் படியென அமைந்தன ;
உன்னுதற்(கு) அரிய பொன்னம் பலத்தினில்
புகலருஞ் சூதர் புராணமீ ரொன்பதும்
நிகரில்தூ ணாக நிரைபெற நின்றன ;
எண்ணரும் பதங்கள் எண்பத் தொன்றும்
தண்ணறுங் கமலத் தட்டதாய் விளங்கின ;
திருநட சபையிதன் தெக்கணம் அதனுள்
சலமில் ஊர்த்துவ தாண்டவம் புரிந்தன ;

---

றது மேல் படி : ஐந்தாம்படி. 45. பஞ்சாக்கரம் - இது நூல பஞ்சாட்சரம். பஞ்சாக்கரத்திருப்படி-திருக்களிற்றுப் படி. 46. உன்னுதற்கு - நினைப்பதற்கு. பொன்னம்பலம் - கனகசபை ; (திருவாலங்காடு, இரத்தினசபை ; மதுரை, இரசித சபை (வெள்ளியம்பலம்) ; திருநெல்வேலி, தாமிர சபை ; திருக்குற்றாலம், சித்திர சபை.) இது நடராசப் பெருமான் திருமஞ்சனம் கொண்டருளும் இடம். 47. சூதர் - சூதமுனிவர். ஈர்ஒன்பது புராணம் - பதினென் புராணம். 49. பதங்கள் எண்பத்து ஒன்று - 81-பத மந்திரங்கள். 51. இதன் என்பது கனக சபை ; இக்கனகசபையின் கீழ்பால், 'பரமானந்த கூபம்' என்னும் புண்ணியதீர்த்தமாகிய கிணறு ஒன்று உள்ளது. தெக்கணம் - தென்திசை. திருநட சபை - நிருத்த சபை ; இதனைக் கல்வெட்டுகள் 'எதிரம் பலம்' எனக் குறிப்பிடுகின்றன. இது கொடி மரத்தின் தென்பால் உள்ளது. இதன் தெக்கணம் திருநடசபை என்க. 52. சலம் இல் - அசைவு இல்லாத ; நிலையான.

சிற்சபைக் குணபால் திவ்வியம் பொருந்தித்
தேவ சபைஎனத் திகழ்ஒளி விளங்கிப்
பேரம் பலத்தின் பெருமைஅள வில்லன ;
உத்தர திசைதனில் வித்தக மாகிய
திருமூ லத்தான தெரிசனை யாவன ;
பொன்னம் பலத்தின் நன்னெடு வாய்தலில்
மாமலர்க் குழலாள் திருமகள் கேள்வன்
சக்கர பாணி துங்கநெடு மாயோன்
பொருவரும் பெருமை ஒருதனி முதலோன்
ஆடிய சேவடி நாடி அறிவுறக்
கோல மால்நெடுங் காலங் தேடியும்
அறியா மையினால் அறிவுமே விட்டே

---

ஊர்த்துவ தாண்டவம் - ஊர்த்துவ தாண்டவ மூர்த்தி. 53. சிற்சபை - சிற்சபைக்கு. குணபால் - கிழக்குத் திசையில் 54. தேவ சபை - தேவர்கள் எப்பொழுதும் வீற்றிருக்கும் சபை: இஃது ஐந்து சபைகளில் ஒன்றாகிய பேரம்பலமாகும். பேரம்பலம் - சோமாஸ்கந்த மூர்த்தி எழுந்தருளிய இடம். 56. உத்தர திசைதனில் - (சிற்சபைக்கு) வடதிசையில். திருமூலத்தானம் சுயம்புமூர்த்தியாகிய திருமூலட்டான நாதர் எழுந்தருளிய இடம். 58. நல் நெடு வாய்தலில் - பெரிய வாசலின் முன். 59. திருமகள் - இலட்சுமி. 61. பொருவரும் - ஒப்பற்ற. ஒரு தனி முதலோன் - சிவபெருமான். 62. நாடி - விரும்பி 63. கோலமால் - வராக

ஊர்த்த நற்சபை பார்த்து வியப்புற்று
மூவடி அளந்த சேவடி நீட்டிப்
படிமுடி தோய அடிமலர் சிந்தித்துப்
பரவிய அன்பொடு பணிந்தே கிடந்தனன் ;
சிற்சபை வாய்தலில் பச்சிம திசைதனில்
புண்டரீ கப்பதங் கொண்ட மாமுனி
மன்றுள் நடனம் நின்றுதெரி சிப்பன் ;
பன்மணி நெடுமுடிப் பதஞ்சலி மாமுனி

---

வடிவுகொண்ட திருமால். 65. ஊர்த்த நற்சபை - நிருத்த சபை. 66. மூவடி அளந்தது வாமனவதாரத்தின் நிகழ்ச்சி ; சேவடி நீட்டி -(வடதிசையில்) காலை நீட்டி. 67. முடிபடி தோய - (தென்திசையில்) தலையை வைத்து, அடி மலர் - இறைவன் திருவடி மலரை ; சிந்தித்து - தியானித்து. 68. பரவிய - துதிக்கும் ; கிடந்தனன் - (கிழக்குப் பார்த்துப்) பள்ளிகொண்டுள்ளனன் ; இப் பள்ளிகொண்ட பெருமாளின் பெயர், தில்லைக் கோவிந்தராசர் என்பதாம். இவரை முற்காலத்தில் தில்லை மூவாயிரவரே பூசித்து வந்ததாகக் குலசேகர ஆழ்வார் தமது பாசுரத்தில், '' தில்லை நகர்த்திருச்சித்திர கூடந்தன்னுள், அந்தணர்கள் ஒரு மூவாயிரவர் ஏத்த, அணிமணி யாசனத் திருந்த அம்மான் '' எனக் கூறியுள்ளார். 69. பச்சிம திசை - மேற்குத்திசை, 70. புண்டரீகம் - புலி, பதம் - கால். புண்டரீகப் பதங் கொண்ட மாமுனி - வியாக்கிரபாதர். 71. மன்று - சிற்சபை. 72. மணி - மாணிக்கம் பொருந்திய.

குடபால் அங்நடங் கும்பிட்(டு) இருப்பன் ;
மாலயன் இந்திரன் வானவர் முனிவர்
வேத கீத நாதம் முழக்கவும்
அரகர வென்று கரமலர் கொட்டிப்
பதம்பெயர்த்(து) ஆட்டி விதவித மாகவும்
உரையது குழறி உடலங் கம்பித்துக்
கண்கள் தாரைகளால் தண்புனல் ஒழுக
நீங்காத் தெரிசனை பாங்குபெறச் செய்யும்
ஞானமன்(று) அதனில் மானிடப் பிறவியில்
வருமுயிர் களுக்குப் பருவபக் குவங்கள்
வந்த காலையிற் சிந்தையின் புற்றுத்
தாக மாகிய மோக நாயகி

---

73. குடபால்-மேற்குத் திசை. 74. மால் அயன்-திருமால் பிரமன். 75. வேதகீத நாதம்-நான்கு வேதங்களின் இசையொலி. 76. கரமலர்-கையாகிய மலரில். கொட்டி-தட்டி. 77. பதம் பெயர்த்து - (வலது) கால் தூக்கி. 78. கம்பித்து-நடுங்கி. 79. தாரை-திரள். தண்புனல் - ஆனந்தக் கண்ணீர். 80. தெரிசனை - தரிசனம். 81. ஞானமன்று - சிற்றம்பலம். 82. பருவ பக்குவங்கள் - தகுதியாகிய பக்குவநிலை ; அது, மந்ததரம், மந்தம், தீவிரம், தீவிர தரம் என்னும் நான்குவித சத்திநிபாதமாகும்; இவை வருதற்குக் காரணம் சரியை கிரியை யோக சிவ புண்ணியங்களாகும். 84. தாகம் - ஆசை. மோகம் - விருப்பம்.

வாழ்வு தரும்உயிர்க் கேள்வனை நாடி
வருவது போல இருவினை யொப்பு
மலபரி பாகம் வந்த காலையிற்
சிதமுஞ் செப்பும் அசிதமுங் கலந்து
திரையென இருந்த திரோபவம் நீக்கிப்
பரவெளி காட்டி உருவெளித் தோற்றிச்
சிகர மாகிய சிறுதுடிக் கையும்
வகர மாகிய [1]வீசு கரமும்

---

85. கேள்வன் - நாயகன். நாடி - விரும்பி. 86. இருவினை யொப்பு – நல்வினை தீவினைகளிலும், அவற்றின் விளைவாகிய புண்ணிய பாவங்களிலும், இவற்றின் பயனாகிய இன்ப துன்பங்களிலும், ஒன்றில் விருப்பும் ஒன்றில் வெறுப்பும் இன்றி ஆன்ம அறிவின்கண் ஒப்ப வெறுப்பு நிகழ்தல். 87. மலபரிபாகம் - ஆணவமலத்தினது சத்தி ஆன்ம அறிவை மயக்க இயலாது வலிகுன்றி நிற்கும் சமயம். 88. சிதம் – ஞானம். செப்பும் - சொல்லுகின்ற. அசிதம் - அறிவின்மை. 89. திரோபவம் - மறைவு. 90. பரவெளி - சிதாகாயம். உருவெளி - மனத்தில் எண்ணியது தோன்றும் மனத்தோற்றம். 91 முதல் 101 - வரை நடராசப் பெருமானுடைய திருவடிவத்தில் அமைந்துள்ள ஐந்தெழுத்து விளக்கம் கூறப் பெற்றுள்ளது. இங்கு 91-95 வரையுள்ள அடிகளோடு "சேர்க்குந்துடி...தான்" எனவரும் உண்மைவிளக்கம் 33-ம் வெண்பாவை ஒப்புநோக்குக. 91. சிறுதுடி - உடுக்கை. 92. வீசுகரம் - வீசிய கை.

பாடபேதம் :—1. அழல்வீசு.

[1]அங்கி நகரம் ஆகிய பாணியும்
யகர மாகிய அபய வத்தமும்
ஒருமுயல் மவ்வில் ஊன்றிய பாதமும் ;
[2]நகர மாகிய சின்மய விளைவாய்த்
திருவருள் சொலிக்கும் ஒருமலர் அடியும்
மவ்வுள வாகிய திவ்விய உதரமும்
சிகர நின்று திரள்பணைப் புயமும்
வகரம தான வதனமண் டலமும்

---

93. அபய அத்தம் - இருபை புரியும் கை. 94. அங்கி- அக்கினி. 95. முயல் - முயலகன். இங்கு, 96-101 வரையுள்ள அடிகளோடு, "ஆடும்படிக்கேள் நல்......பார்" எனவரும் உண்மைவிளக்கம் 32-ம் வெண்பாவை ஒப்பு நோக்குக. 96. நகரமாகிய ஒருமலர் அடியும் என்க. சின்மயவிளைவு - ஞானத்தோற்றம். 97. சொலிக்கும் - பிரகாசிக்கும். ஒருமலர் அடி - தூக்கிய பாதம்; குஞ்சித பாதம்: "ஆட எடுத்திட்ட பாதமன் றோநம்மை ஆட்கொண்டதே" என்பது அப்பர் தேவார அடி.; "அடுத்த இன்றுயிர்க்கு அளவில் பேரின்பம், கொடுப்பது முதல்வ! நின் குஞ்சித பதமே" என்பது ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் திருவாக்கு. 98. உதரம் - இங்கு உந்தி. 99. திரள் பணைப்புயம் - திரண்டபெருத்த தோள். 100. வதன மண்டலம் - முகம். இங்கு, 102-108 வரையுள்ள அடிகளோடு "ஓங்காரமே நற்திருவாசி......சுடராம்" என வரும்

பாடபேதம் :—1. மயங்கி. 2. நன்னய.

யகர மாகிய அணிமலர் முடியும்;
பிரணவ மாகிய [1]பிரபையும் அதன்மேல்
மருவி அக்கர வளரொளிச் சுடர்களும்
வாம பாக மரகத வடிவாய்
இமயம் ஈன்ற உமையவள் பொலிவுடன்
மாதுபா கத்தை மலர்க்கண் நாடவும்
கோலங் கொண்டுநின்(று) ஆலமர் கடவுள்
பாதச் சிலம்பொலி வேத மிழற்ற
வலக்கை டமருகம் மாயை அறுத்திட

---

உண்மைவிளக்கம் 34-ம் வெண்பா அடிகளை ஒப்பு நோக்குக. 102. பிரணவம் - ஓங்காரவடிவம். பிரபை - திருவாசி. 103. மருவி - பொருந்தி (நிற்கும்). அக்கரம் - பஞ்சாக்கரம். 104. வாமபாகம் - இடது பாகம். மரகதம் - பச்சைமணி. 105. இமயம் - இங்கு, மேருமலை அரசன். பொலிவுடன் - சிறப்புடன் (விளங்க). 106. மாதுபாகம் - இடது பாகம். மலர்க்கண் - அருள்நோக்கம். 107. கோலங்கொண்டு - புன்முறுவல் செய்யும் கோலங்கொண்டு. நடராசப் பெருமானின் புன்முறுவலே ஆன்மாக்களுடைய மூவகைத் துன்பங்களையும் போக்கவல்லது: "சிரித்தமுகங் கண்ட கண்கொண்டு மற்றினிக் காண்பதென்னே" என்பது அப்பர் தேவார அடி. ஆல் - கல்லால விருட்சம். ஆலமர் கடவுள் - சிவபெருமான். 108. மிழற்ற - ஒலிக்க. 109-112 வரையுள்ள அடிக

பாடபேதம்:—1. பிறவும்.

இடக்கை அக்கினி இருவினை எரித்திட
ஒருபதம் மலத்தில் ஊன்றி மிதித்துத்
திருவரு ளாகிய ஒருபதம் எடுத்துக்
குடமுழ(வு) இரட்டலிற் கடலொலி கரப்பத்
துளைவளை முழக்கலின் மறையொலி இரிபட
மாமறை ஓதிப் பூமழை பொழிந்துநின்(று)
அமரரும் முனிவரும் அரியுடன் இந்திரன்
பிரமருங் காண்டகு பரம நாடகம்
ஆடிய பொதுவின் அளவிது வாகும்;
அத்திருச் சபைசூழ் ஆவர ணத்திற்
குடதிசை வாய்தலிற் கடகரி முகவன்

---

ளோடு "மாயைதனை......தான்" எனவரும் உண்மை விளக்கம் 36-ம் வெண்பாவை ஒப்புநோக்குக; 109. டமருகம் - உடுக்கை. மாயை - மாயாமலம். 110. இருவினை - பெரிய கன்மமலம் 111. ஊன்றி மிதித்து - மேலிடாமல் ஊன்றி அழுத்தி. 112. ஒருபதம் எடுத்து என்றது குஞ்சித பாதத்தை. 113. குடமுழவு-ஒருவகை வாத்தியம். இரட்டல் - ஒலித்தல். கரப்ப - ஒளிப்ப. 114. துளைவளை - துவாரத்தையுடைய சங்கு இரிபட - ஒலிப்ப 116. அரி - திருமால் 117. பரமநாடகம் - ஆனந்த தாண்டவம்; இதுவே, நடராசப் பெருமான் ஆடுந்தாண்டவமாகும். 119. திருச்சபை - பொற்சபை· ஆவரணம் - மதில். 120. குடதிசை வாய்தலில் (இரண்டாம் பிரகாரத்துள்ள) மேலவாசலின் எதிரில். கடம் - மதம். கரிமுகவன் - விநாயகக்கடவுள்.

பரம நாடகம் ஆடிய பொதுவில்
நேச ஞகிய பாச வங்குசன்
ஒருவிரல் சுட்டித் திருமுறை காட்டுங்
குணபதி யாகிய கணபதி இருப்பன் ;
சிற்சபை வடபால் செப்பரும் பெருமை
வாயுகோ ணத்தில் தாய்சிவ காமி
மன்னிய திருவருட் சந்நி தானமும்
அச்சந் நிதியில் அமர்சிவ கங்கையுந்

---

கரிமுகவனுகிய பாசவங்குசன் என்க. 122. நேசனுகிய - அன்புடையவனுகிய. பாசம் அங்குசன் - பாசத்தையும் அங்குசத்தையும் ஏந்தியவன். 123. திருமுறை - இங்குத் திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர் பாடியருளிய தேவாரத் திருமுறைகள். 124. குணபதி - மேன்மை பொருந்திய தலைவன். கணபதி - இவர் திருமுறை காட்டிய விநாயகர். இவ்விநாயகர் மண்டபத்தின் உச்சியில் இருப்பதால், தற்போது' உச்சிப்பிள்ளையார் ' எனப் பெயர் பெறுகின்றுர். 125. செப்பரும் - சொல்லுதற்கரிய. 126. வாயுகோணம் - வடமேற்கு மூலை. தாய்சிவகாமி...சந்நிதானம் - சிவகாமி அம்மையார் ஆலயம். இது தனித்த பெரும் ஆலயமாகும். இதன் வடபால் பாண்டிய நாயகர் கோயில் உள்ளது. இங்குச் சண்முகக் கடவுள் வள்ளி தேவசேனு சமேதராக எழுந்தருளியுள்ளார். 128. சிவகங்கை - இஃது ஒரு பெரிய சிவ தீர்த்தம் ; இச் சிவகங்கையின் வடபால் நவலிங்கம் கோயில் ஒன்று உள்ளது ; அது ' திருத்

தெளிபுனற் சிவகங் கைக்குமேல் குணபால்
எழில்பெற விளங்கிய ராச சபையும்
அண்டச் சுவரெனக் கொண்ட திருமதிலும்
மேலவர் நெருங்கிய நாலு வாய்தலிற்
பொன்னெடு மேருப் புவியினில் தோன்றிய(து)
என்னவுஞ் சிறப்புற்(று) எழுந்தகோ புரங்களும்
பச்சிம வாய்தலில் செச்சை அணிபுயன்

---

தொண்டத் தொகை ஈச்சுரம்' எனவும் பெயர்பெறும். 129. சிவகங்கைக்குமேல் - சிவகங்கையின் அருகு. குண பால் - கிழக்கில் 130. ராசசபை - ஆயிரக்கால் மண்டபம் ; (இது சுமார் 190 - அடி அகலமும் 340 - அடி நீளமுமுடையது.) இங்கு, ஒவ்வோர் ஆண்டிலும் ஆனித்திருமஞ்சனம், மார்கழித்திருவாதிரை ஆகிய இரு நாளில் ஸ்ரீ நடராசப் பெருமான் எழுந்தருளி அபிடேகம் கொண்டருளுவர். 131. அண்டச் சுவர் என - அண்டச் சுவரைப் போல். கொண்ட - மிகவுயர்வுகொண்ட. 132. மேலவர் நெருங்கிய நாலுவாய்தலில்-மாணிக்கவாசகர், திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர் இந்நால்வராகிய மேலவர் முறையே நடராசப்பெருமானை வழிபடச் சென்ற கிழக்கு, தெற்கு, மேற்கு வடக்கு என்னும் நான்கு வாயில்கள் பொருந்திய. 133. பொன் நெடு மேரு - பொன்மயமான பெரிய மேருமலை. 135. பச்சிம வாய்தலில் - மேற்கு வாசலில் ; இங்குக் கீழ்ப்புறம் வடசாரில் முருகன் ஆலயம் உள்ளது ; தென்சாரில் சுமார் நூறடியில் முக்குறுணி விநாயகர் ஆலயம் ஒன்று உள்ளது : வாயிலின் மேல்புறம் தென்சாரில்

அமரர் சிறைமீட்ட குமர நாயகன்
சுடர்விடு கதிர்வேற் கடவுள் இருப்பன்;
அளப்பரும் பெருமையின் மகத்துவ மாகிய
தில்லை மாநகர் எல்லை காண்கினும்
எள்பொழு தாகிலும் உளப்பட நினையினும்
நேச மாகவும் நாவினால் பேசினுஞ்
சிதம்பரம்என்றசொற்செவியினிற்கேட்பினும்
இறையினைக் கொடுக்கும் பிறவி சாகரக்
கருவடி அறுத்துத் திருவடித் தாமரை
நிழலில் வாழ்வது நிச்சயந் தானே.

சிதம்பர விலாசம் முற்றிற்று

---

ஸ்ரீ கற்பக விநாயகர் ஆலயம் ஒன்று உள்ளது. செச்சை - வெட்சிமலர். 136. குமர நாயகனாகிய கதிர்வேற் கடவுள் என்க இந்த முருகக்கடவுள் ஆலயம் திருப்புகழ் பாடல் பெற்றதாகும். இங்கு, நவவீரர்களின் திருவுருவங்களும் உள்ளன. 138. மகத்துவம் - மகிமை. 139. காண்கினும் – தரிசித்தாலும். 140. எள்பொழுது - சிறிதுகாலம். உளப்பட நினையினும் - மனத்தில் நினைத்தாலும். 141. பேசினும் - (இடைவிடாது) பேசினாலும் 142. கேட்பினும் – (பிறர் சொல்லக்) கேட்டாலும். 143. இறையினைக் கொடுக்கும் - சிறுமையினை அளிக்கும் பிறவி சாகரம் – பிறவிக்கடல். 144. கரு அடி - மூலக் கரு. அறுத்து - நீக்கி. 145. நிச்சயம் - உறுதி.

உ

சிவ சிவ

## திருச்சிற்றம்பலம்

—o—

தற்பரமாய்ப் பரபதமாய்த்
தாவில்அநு பூதியதாய்
அற்புதமாய் ஆரமுதாய்
ஆனந்த நிலையவொளிப்
பொற்பினதாய்ப் பிரிவிலதாய்ப்
பொருளாகி அருளாகுஞ்
சிற்பரமாம் அம்பரமாம்
திருச்சிற்றம் பலம்போற்றி.

— கோயிற் புராணம்

## வாழ்த்து

வாழ்க அந்தணர் வானவர் ஆனினம் ;
வீழ்க தண்புனல் ; வேந்தனும் ஓங்குக ;
ஆழ்க தீயதெ லாம்;அரன் நாமமே
சூழ்க; வையக முந்துயர் தீர்கவே.

— தேவாரம்

---

| | | ரூ. | அ. |
|---|---|---|---|
| 21 | கந்தர் அனுபூதி ஷை ... | 0 | 2 |
| 22 | கந்தர் கலிவெண்பா — ஆங்கிலமும் ஹிந்தியும் கூடியது ... | 0 | 6 |
| 23 | கந்தர் கலிவெண்பா மூலம் மட்டும் ... | 0 | 1 |
| 24 | கந்தர் கலிவெண்பா – தி. பட்டுச்சாமி ஓதுவார் உரையுடன் கூடியது (அச்சில்) | | |
| 25 | நீதிநெறி விளக்கம் - ஆங்கிலம்-ஹிந்தி... | 0 | 8 |
| 26 | சகல கலா வல்லி மாலை – ஆங்கிலமும் ஹிந்தியும் கூடியது ... | 0 | 1 |
| 27 | அபிராமி அந்தாதி – கி. வா. ஜ. குறிப்புரையுடன் கூடியது (அச்சில்) ... | | |
| 28 | சிவஞான சித்தியார் — ஆங்கிலமும், ஹிந்தியும் கூடியது ... | 5 | 0 |
| 29 | ஷை ஹிந்தி மட்டும் ... | 1 | 0 |
| 30 | திருக்குறள் – அறத்துப் பால் - ஹிந்தி மொழி பெயர்ப்பு ... | 1 | 8 |
| 31 | ஷை பொருட்பால் ஷை ... | 2 | 8 |
| 32 | ஷை காமத்துப்பால் ஷை ... | 1 | 0 |
| | ஷை மூன்று புத்தகங்களும் சேர்த்து ... | 4 | 0 |
| 33 | முதுமொழிமேல் வைப்பு - ஸ்ரீ வெள்ளியம்பலவாணத்தம்பிரான் சுவாமிகள்.. | 0 | 12 |
| 34 | திருவுசாத்தானக் கல்வெட்டுகள் ... | 0 | 6 |

---

கிடைக்குமிடங்கள் :

1. ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் கலைக்கோயில், ஸ்ரீவைகுண்டம்
2. தியாகராச விலாஸ், திருவல்லிக்கேணி, சென்னை.

---

குறிப்பு : ஷை விற்பனைத்தொகை 'குமரகுருபரன்' பத்திரிகையைச் சாரும்.

உ

# "குமர குருபரன்"

[ தமிழ்த் திங்கள் வெளியீடு ]

ஸ்ரீ வைகுண்டம்
ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் மடாலயத்திலிருந்து
விரோதி ஆண்டு தை மாதம் முதல்
மாதந்தோறும் வெளிவருகிறது

*

இது
சைவசித்தாந்தம், ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள்
பிரபந்தம், பன்னிரு திருமுறை ஆராய்ச்சி,
இலக்கியம், பிற மொழிகள், கலாசாரம்
சம்பந்தமான கட்டுரைகள் கொண்டது.

*

**T. M. குமரகுருபரன் பிள்ளை, B. A., B. L.,**
நிர்வாக ஆசிரியர் 'குமரகுருபரன்'
மானேஜிங் டிரஸ்டி, ஸ்ரீ குமரகுருபரசுவாமி மடம்
(நிரந்தரத் தலைவர் குமரகுருபரன் சங்கம்)
ஸ்ரீவைகுண்டம்

வருட சந்தா ரூ. 1-8-0 தனிப்பிரதி 0-2-0